N. S. Balakrishnan

30/9/46

City Block Makers Madras

# சகடயோகம்

## தமிழ் படம்

டைரக்ஷன், ஏ. பத்மநாபன்.

---

விநியோகஸ்தர்கள்:-

**ஜெயலெக்ஷ்மி பிக்சர்ஸ்,**

மதராஸ் & மதுரை.

## நடிகர், நடிகைகள்

| | | |
|---|---|---|
| கொத்தமங்கலம் சீனு | ........................ | அபாரயுக்தி |
| T. R. ராமச்சந்திரன் | ........................ | சமயோசிதம் |
| குளத்து மணி | ........................ | அரசன் |
| வித்வான் சீனிவாசன் | ........................ | முனிவர் |
| T. S. துரைராஜ் | ........................ | மாமா |
| M. R. சுவாமிநாதன் | ........................ | முனிவர் |
| காளி N. ரத்தினம் | ........................ | பூசாரி |
| V. N. ஜானகி | ........................ | பாரிஜாதம் |
| மாயவரம் பாப்பா | ........................ | இளவரசி |
| P. A. பெரியநாயகி | ........................ | சுபத்திரை |
| C. T. ராஜகாந்தம் | ........................ | குறிசொல்பவள் |
| P. R. மங்களம் | ........................ | தாய்க்கிழவி |

மற்றும் அநேகர் நடித்தது.



கதை:
நீலகண்டன்

ஸ்டுடியோ:
மாடர்ன் தியேட்டர்ஸ்,
சேலம்.

பாட்டு:
பலவங்குடி சாமா,
S. G. செல்லப்பா அய்யர்,
நாராயணகவி.

டைரக்ஷன்:- R. பத்மநாபன்.

விநியோகஸ்தர்கள்:-

ஜெயலெக்ஷிமி பிக்சர்ஸ்,

மதருஸ் & மதுரை.

# "சகடயோகம்"

(மதனகாமராஜன் கதைகளில் மாங்கனியால் மகுடம் பெற்ற கதை.)

கதைச்சுருக்கம்:-

கோசல தேசத்து அரசன் ஆதித்யவர்மன் புத்திரபாக்கிய மில்லாமல் தேவியை பூஜைசெய்கிறான். ஓர் முனிவருடைய எச்சரிக்கையால் தனக்குவரும் பின் கஷ்டகாலத்தை தவிர்க்க நாட்டைவிட்டு அயல்நாடு போய் அவரும், அவர்மனைவி அன்னபூர்ணியும் நந்திகிராமம் என்ற கிராமத்தில் கூலி வேலைசெய்து பிழைத்து வருகிறார்கள். அப்பொழுது அவர்களுக்கு இரு புத்திரர்கள் பிறந்து வளர்ந்து வருகிறார்கள்.

புத்திரர்களான அபாரயுக்தி, ஸமயோசிதம் என்கிற இவர்கள் தனது தந்தையார் கஷ்டங்களை நினைந்து வருந்தி அயல்நாட்டிற்கு சம்பாதித்துவர செல்கிறார்கள். அவர்கள் போகும் வழியில் ஒரு முனிவரைக் கண்டு வணங்கி அவர் அனுக்ரகம் பெற்றுச் செல்கிறார்கள். அக்காட்டில் மற்றொரு பகுதியில் ஒரு முனிவர் ஓர் மாமரத்தடியில் அதிலிருக்கும் ஓர் மாங்கனிக்காக 12வருஷ காலமாக தவம் செய்துகொண்டு அன்று பழம் கீழே விழுமென அறிந்து ஸ்நானம் செய்து வந்தபின் பழத்தை புசிக்கலாமென்று நீரோடைக்குச் செல்லுகிறார்.

அச்சமயத்தில் அபாரயுக்தியும், ஸமயோசிதமும் அம் மரத்தடியில் வந்து கொண்டிருக்கையில் அம் மாங்கனி அதிர்ஷ்ட வசமாக கீழே விழவும், அதை அவர்கள் எடுத்துக்கொண்டு செல்கிறார்கள். சற்று நேரத்தில் அந்த தபோமுனிவர் நீரோடையிலிருந்து ஸ்நானம் செய்துவந்து பழத்தைக் காணாமல் மனம் பதறி இவர்களைப்பார்த்து மாங்கனியைப் பற்றி விசாரிக்கிறார். மற்றும் மனம் பதட்டத்தால் அந்த மாங்கனியின் மகத்துவத்தையும் இவர்களிடம் சொல்லி விடுகிறார். இவர்கள் கனியைத் தாங்கள் காணவில்லை யென்று சொல்லிவிட்டுச் செல்லுகிறார்கள். பிறகு அபாரயுக்தி மேல் பழத்தையும், சமயோசிதம், மாங்கொட்டையையும் சாப்பிடுகிறார்கள்.

சமயோசிதம் சாப்பிட்ட களைப்பால் உறங்க, அபாரயுக்தி வனத்தின் மற்றொருபாகத்தில் போய் விநோதங்களைக் காணப்போகிறான். அங்கு அவன்

பாடிக்கொண்டே ஓர் மரத்தடியில் கண் அயர்கிறான். சமயோசிதம் அபார யுக்தியைக் காணாமல் தேடி அலைகிறான். இதே சமயத்தில் அக்காட்டின் சமீபத்திலுள்ள ஓர் நகரத்தின் அரசன், சந்ததியில்லாமல் இறந்துபோக, அந்த அரசாங்க வழக்கப்படி பட்டத்து யானையிடம் பூமாலையைக் கொடுத்து யானை மாலையிடும் மனிதனை அரசனாக்கிக் கொள்ள ஏற்பாடாகிறது. இந்தப் பட்டத்து யானை தூங்கும் அபாரயுக்தியின் கழுத்தில் மாலையைப் போட அத் தேசத்து மந்திரி முதலியோர் இவனை வணங்கி தன் தேசத்திற்கு அழைத்துச் செல்லுகிறார்கள். சமயோஜிதத்தை தேடி அழைத்து வருவதாகவும் அவனுக்கு ஆறுதல் கூறுகிறார்கள்.

சமயோஜிதம் தனது தமயனைக்காணாமல் வேறொரு நகரத்திற்குச்சென்று அங்கொரு தாசியின் வீட்டையடைந்து அவளுடன் பேசும் சமயத்தில், சிரிக்க முத்துக்கள் அவன் வாயிலிருந்து உதிர, அதைக்கண்ட தாசி பாரிஜா தமும், தாய்கிழவி லோகநாயகியும், மற்றுமுள்ள மாமாவும் சமயோஜிதத்தை உபசரித்து அவனிடம் முத்துக்களின் மருமத்தை அறிந்து அம் மாங் கொட்டையை மருந்தால் வெளிப்படுத்தி சமயோஜிதத்தை ஓர்இரவில் அவனை யறியாமல் வெளியே கடத்தி விடுகிறார்கள்.

இங்கு அபாரயுக்தி அரசனாகி பல வித்தைகளைக்கற்று தாய்தந்தையர்களை அழைத்து வந்து தனக்குகந்த ஓர் பெண்மணியை கல்யாணம் செய்து கொள்கிறான். தனது தம்பி சமயோஜிதத்தைக் கண்டு பிடிக்க சேவகர்களை அனுப்பி விடுகிறான். சமயோஜிதம் சுய அறிவு வந்து, தாசியின் வீட்டை நோக்கி வந்து கொண்டிருக்கையில் நாலு சிஷ்யர்கள் அவர்களின் இறந்த குரு வுடைய சாமான்களுக்காக சண்டையிடுவதை யறிந்து அவர்களை ஏமாற்றி அவர்கள் வசமிருந்த ஓர் ஜோல்னா பையையும், அவர்கள் தலைப்பாகையும் கைப் பற்றி தாசி பாரிஜாதம் வீடு செல்கிறான். அப்பொழுது தாசியும், மாமாவும் சமயோசிதத்தை அன்பு கொண்டவர்கள் போல் பாசாங்கு செய்து அழைத்து உபசரிக்கிறார்கள். அவர்கள் இவனிடமிருக்கும் அந்த குருவின் தலைப்பாகை யும், பையையும் கைப்பற்ற உத்தேசித்து, வெகு தூரத்திலிருக்கும் காளி கோவிலுக்கு பூஜை செய்ய, அந்த தலைப்பாகையின் உதவியால் எல்லோரும் பறந்து செல்கிறார்கள். அங்கு தாய்க்கிழவி சமயோஜிதம் வசமிருக்கும் அபூர்வ சாமான்களை வாங்கிக்கொண்டு சமயோஜிதத்தையும், மாமாவையும் விறகு கொண்டுவர ஏவிவிட்டு அவளும், பாரிஜாதமும் பறந்து தன் வீடு செல்லுகிறார்கள்.

சமயோஜிதமும், மாமாவும் திரும்பிவந்து அவர்களை காணாமல் ஏமாற்ற மடைந்து. தங்கள் உயிர்களை மாய்த்துக்கொள்வதென்று காளி கோவில் முன்

எத்தனிக்கையில் அக்கோவிலிலுள்ள காளி பிரசன்னமாகி அவர்களைத்தடுத்து சமயோஜிதத்திற்கு அவன் சகோதரர் இருக்கிற இடத்தை தெரிவித்து ஆசீர்வதிக்கிறாள்.

சமயோஜிதமும், மாமாவும் காட்டுவழியாய் வரும் பொழுது அங்கிருந்த அபூர்வ மாங்கனிகளைப் பறித்து வைத்துக் கொள்கிறார்கள். அம்மாங்கனியால் மனுஷர்களைக் குரங்காக்கவும், மனிதராக்கவும் உள்ள செயலை அடைகிறார்கள். மாமா சாமியார் வேடம் பூண்டு சமயோஜிதத்துடன் தாசிவீடு திரும்பி வருகிறார்கள். தாய்க்கிழவி சமயோஜிதத்திற்கு கோபம் வாராதபடி ஏதோ புலி வந்ததாகவும், அதற்கு பயந்துதான் அவர்கள் அந்தத் தலைப்பாகையைக் கொண்டு, தாங்கள் திரும்பி வந்ததாகவும் இவர்களிடம் சமாதானம் கூறுகிறாள். மற்றும் தாய்க்கிழவி, தான் யௌவனம் பெற சன்யாசி வேஷம்பூண்ட மாமாவிடம் அனுக்கிரஹம் கேட்க, அவன் தாய்க்கிழவிக்கும் பாரிஜாதத்திற்கும் மாங்கனியைக் கொடுத்து இவர்களை குரங்காக மாற்றுகிறான்.

இச்சமயத்தில் அபாரயுக்தியினால் அனுப்பப்பட்ட ஆட்கள் சமயோஜிதத்தைக்கண்டு தேசத்திற்கு அழைத்துச் செல்கிறார்கள். அங்கு சமயோஜிதம் தனது அண்ணன் அபாரயுக்தி, தாய் தந்தையரைக் கண்டு மிகவும் சந்தோஷத்துடன் வாழ்கிறான்.

சுபம்.

T.R. ராமச்சந்திரன் V.N. ஜானகி



நடித்த சகடயோகம் தமிழ்

# "சகடயோகம்"

ராகம்—பீம்ப்ளாஸ்) முனிவர் (தாளம்—ஆதி

1. பல்லவி

மானில வாழ்வில் மயங்காதே—மதி
மோசம் போகாதே — மனமே

அநுபல்லவி

வானில் தோன்றி மறையும் மின்போல்
வாரிதி அலைபோல் மாறி மாறி வரும் (மா)

சரணம்

அரசினை ஆண்டவன் ஆண்டியும் ஆவான்
அடிமையும் அரசாள்வான்
ஒருவழி நில்லாது துறவு மற்றெல்லாம்
உதவாக்கரை யன்றோ
இரவோடு பகலின் இயல்பது போல
இன்ப துன்பம் மாறும்
மருள் தரும் மயலால் மனமதை மயக்கும்
மாய்கையாலே தடுமாறாதே (மா)

2 குறத்தி

ஏ அம்மே அப்பே பச்சை குத்தலியோ
இடத்துக்குத் தக்க படத்துப் பச்சே எழுத்துப்பச்சே (ஏ)
எக்கினையோ அம்பிளமேலே பொம்பிளே பச்சே
இன்னும் பல வித விதமாகக்குத்தியும் வச்சேன்
எழிலாகத் துளிகூட வலியாமே மெதுவா
ஏ டியோ டியோ அம்மே அப்பே பச்சே குத்தலியோ (ஏ)
குன்றடுத்த பரம எங்கள் குடித்தலமே
குறிபார்த்துச் சொல்லுவோம் பலாபலமே
பன்றிமலையான் பன்னிருகையான் என்றுந்துணையாய்
எண்ணி யிருப்போமே (ஏ)

3. ராகம்—சிந்துகானடா) அபாரயுக்தி (தாளம்—திச்ரலகு

பல்லவி

பூமி இயற்கை காணக்காண பொங்கும் இன்பமே

அநுபல்லவி

மனது சாந்தம் தரும் ஏகாந்தம் மகிழ்தரும் இதுவே ஆனந்தம் (பூ)

சரணம்

ஜிலு ஜிலு வென்றே மலையின் சிகர அருவி நீரழகும்
செழித்த செண்பகச்சோலையிலே சிறந்த மாலைவேளையிலே
குலவு குயிலின் இனிய கானம் குளிர்தரும் எழில் நீலவானம்
பலவித மலர்தரும் சுகந்தம் பார்க்கப் பார்க்கப் பரமானந்தம் (பூ)

5. சமயோசிதம், பாரிஜாதம் பாட்டு

சம - இருவருமே ஒருமனதாய் இருந்தேயினி வாழ்ந்திடுவோமே

பாரி- மருவிய பொன்பொருள் நிலைபெறும் வரையும்
மறந்திடனே உன்னைநானே

சம - உன்னை கண்டதுமே நான் மயங்கியே மையலானேன்
கனவிலும் நான்உனை மறவேனடியே செழுந்தேனே

தாய்கிழவி- கண்டதும் என் மனதைக்கவர்ந்த என் கட்டழகா
நான்கொண்ட மோஹம் குறையாதே உன்னிடமே

மாமா- பத்து வயதுமுதல் பெத்த தாயையும் மறந்து
நித்தம் உனது மனங்குளிர நடந்து
வித்தையில் வித்தையாய் ஐந்தாம்வேதங் கற்கும்சற் குருவே
பத்தினியே தர்ம பத்தினியே நல்ல உத்தமியே நான்
சத்தியமாய் உன்னை மறவேன்

சம - மானே உனைப்பிரியேனே அதை மனதிலும் நினையேனே

பாரி- என்மனமும் அதுபோலவே

சம - என்மனமும் அதுபோலவே

இரு- இருவர் மனமும் ஒருமனதாய் என்றும் வாழுவோமே
இனி இணைபிரியா துலகமதில் இருவரும் நாமே

6. ராகம்-சிம்மேந்திர மத்திமம்) நாடகசீன் - அர்ஜுனன் (தாளம்-ஆதி

பல்லவி

கண்ணா கண்ணா கருணைசேர் கமலக் (க)

அநுபல்லவி

விண்ணுடர் எனும் விபுதர் கொண்டாடும்
வேணுகான மனமோஹன கமலக் (க)

சரணம்

மனையறம் கைகூடவே சுபத்திரை
மடமானை மணஞ்சூட உனைநாடினேன்
சனக அனந்தன் சாது ஜனார்த்தன
சர்வலோக பரிபாலனா கமலக் (க)

7. பஞ்ச கன்னிகையர் அர்ஜுனன்

பெண்கள்- காண்டிபரே நீரும் எம்மையே திருக்
கல்யாணம் தான்கொண்டால் நன்மையே
அர் - வேண்டேனே நானும் உங்களே
பெண் - விடமாட்டோம் ஐயா நாங்களுங்களே
அர் - இந்த விளையாட்டினுல் வரும் விபரீதமே
பெண் - இது நியாயமா
அர் - சம்ப்ரதாயமா
1 பெண் - உங்க வேலைக்காரியா நானும் நடப்பேன்
2 பெண் - நானும் வெற்றிலைச்சுருள் மடித்துக் கொடுப்பேன்
3 பெண் - உங்கள் விருப்பம் இன்னதென்று கண்டு நடப்பேன்
4 பெண் - நானும் வீணைமீட்டிக் காதல் பாட்டுப்படிபபேன் வாரும் (கா)

8. ராகம்.கமாஸ்) சுபத்தரை (தாளம்-திச்ரலகு

எந்தன் மணாளனை நான் எங்கு காண்பேன்
எழில்தவழும் மதிவதனன் குருகுல நவமணியெனும்
வில்விஜய வீரன் சுகுமாரன் (எங்)
பூஜாபலத்தாலே பெறும் புண்யனை லாவண்யனை
ஆஜானு பாகனை என தன்பனை ஆள் அழகனை
மாசோபித மாகிய மலர்மாலை சூட நானிவ்வேளை
நாடியே வனமெங்குந் தேடியே வந்தேன் (எங்)

9. சுபத்தரை

ஹரிஸ்ரீ ஹரி ஹரி ஹரி தேவா அபயம் மாதவா அபயம் ஹரிதேவா
கிருஷ்ணா வாவா கேசவா வாவா துஷ்டசம்ஹாரா முகுந்தா வாவா
கதிவேறிலையினி மஹானுபாவா வருவாய் ஸகோதரா தேவா (அப)
கமலபாதா விபூத வினுதா கருணாதாரா க்ருபா கடாக்ஷா
ப்ரிதித்யான ஞான மனோரமணா வாவா வரதா ஹரிதேவா (அப)

10. பூசாரி பாட்டு

தெம்மதுரை வாசலுக்கு திருவாசலுக்கு
தெப்பக்குளம் நேர்கிழக்குக் குளம்நேர்கிழக்கு
மாமாரியம்மனுன் மாரியம்மனுக்கு
மாவிடிச்சுப் பொங்கவைச்சுத் தினம் பொங்கவச்சு

பூவெடுத்து மாலையிடு ஆத்தா
பொன் கொடுத்து பூசையிட்டா ஆத்தா
கோளந்தே கெடைக்கும் குடிவளரும் குடிவளரும் அவளைக்
கும்பிடுவோருக்கு குறையுமில்லே குறையுமில்லே
கழனிசெழிக்கும் உழவருக்கு உழவருக்கு
அவகடனையுமிங்கே செலுத்திடப்பா செலுத்திடப்பா

**11.** ராகம்-ஆரபி) **அபாரயுக்தி** (தாளம்-ஆதி

பல்லவி

கலைஞானமே அருள்வாய் ஸகல கமலாஸனியே கருணாநிதியே (கலை)

சரணம்

கலைவாணி மதுர வீணபாணி கனகநவமணி மாலாதாரிணி
கலைமாமதிவதினி எழில்தருணி
கனிவுடன் உனதிரு பதமலர் பணிந்தேன் (கலை)

**12.** **டான்ஸ்பாட்டு**

தெய்வயானை- வடிவேலவீர மணாளரே பூங்கொடிகளுடனே
நிற்பவள் யார் எந்த ஊர் என்னபேரோ (வடி)
வள்ளி- மயில்வாஹன மனமோஹனரே உங்களை
மணவாளா என்பவள் இவள்யார் நடமாடும் (மயி)
சுப்ரமண்யர்- வானத்துரை யபிமானப் பெண் குஞ்சரி
மாதிவள் என்மனையா முன்சகோதரி
யானைப்பெண்ணே யிவள்தான் வனசஞ்சரி
மானினி என்னினைவின் வள்ளிநீயே யறி
வடிவேலனென் வாழ்வு நீங்களே மன
வாஞ்சைகொண்ட (வடி)
தெய் -, மாப்பிள்ளைக்குப் பஞ்சமோடியம்மா உங்கள் மலைநாட்டிலே
கோப்புக்கெட்ட குறத்தியே யிவர்
கூப்பிட்டால் நீவராலாமோ (மா)
வள் - குடித்தனம் செய்யும் வழக்கத்தாலே
கொண்டவர்க்குத் தக்கபடி யுன்னாலே
நடக்கவு முடியாத்தாலே நாடியெனே மணந்தா ரன்பாலே
சுப்ர - ஒருகண்ணை யிமைமெரண்டுங் காப்பதுபோல் நீங்கள்
உறவுடனே எனக்குதவி செய்தால் நலம்

**13.** ராகம்-சுத்தசாவேரி) **அபாரயுக்தி மனைவி** (தாளம்-ஆதி

எல்லோரும் உணவுகொள்வீரே எழில் மிகுந்தளிர் பறவைகளே
நல்மொழி சொல் மைனாவே நவில் பசுங்கிளியே புறாவே
குரலினிய கருங்குயிலே கோலக்கலாப மாமயிலே வா
கோபங்கொள்ளுதல் முறையோ சொல்வீரே
குணத்தினில் சிறந்தீர் நீரே
கும்பலாக வரும் ஒன்றுசேர இன்று விரைவினில் (எல்)

14. ராகமாலிகை) அபாரயுக்தி, மனைவி (தாளம்-ஆதி

ஆண்- வாசமிகும் மலரே என்னிடம்நீ பேசிடலாகாதோ ஓர் வார்த்தை
பெண்- பேசுந்தன்மை பூமலர் பெறுமோ ப்ரேமையோ தந்திரமோ
ஆண்- அன்பிலே மலர்ந்த அமுதமே - எனதாருயிர் ஜீவிதமே
பெண்- அமுதை நினைந்தே அமரரும் அசுரரும்
அடைந்த சுகம் ஏதுவோ
ஆண்- அது வேண்டேன்
பெண்- பின் எது வேண்டும்
ஆண்- உன் பவழவாயால் அருள்வாய் ஒருமொழியே

15. ராகம்-கேதார கௌளா) முனிவர் (தாளம்-ஆதி

பல்லவி

ஈசன் அருளே வேண்டும் பேரின்பம் பெறுக
புவியில் அன்புவளர ஜெக (ஈச)

அநுபல்லவி

பாசமிகும் ப்ரபஞ்ச ஆசையைத் துறந்தே
பரமனைத்தினம் நினைந்தே துதிபுரிய மனமகிழும் ஜெக (ஈச)

சரணம்

கதிரவன்முன் கலைந்திடும் பனிபோலும்
காற்றினால் கலையும் கார்முகில் போலும்
மனம் வருந்தும் துயர்நீக்கி மேன்மேலும்
மங்களமே பெறவும் மகிழ்ந்திடவும் (ஈச)

16. மாமா

உர்ரு - அனுமந்தராயா - அனுமந்தராயா - அனுமந்தராயா
போட்றீ தோப்புக்கரணம் - போட்றீ தோப்புக்கரணம் -
போட்றீ தோப்புக்கரணம்
பல்லையிளிக்காதே – பகட்டெல்லாங் காட்டாதே
வல்லமைகள் நானறிவேன் வாலாட்டாதே

பாட்டு எடுப்பு

ஜிம் ஜிமுத்தா ஜிமுக்குத்தா ஜிம் ஜிமுத்தா ஜி முக்குத்தா
ஜிம் ஜிமுத்தா ஜிமுக்குத்தப்படி ஜிம் ஜிமுத்த ஜி முக்குத்தா
மாட்டிக்கிட்டே மாட்டிக்கிட்டே மாமங்கிட்டே -
மாட்டிக்கிட்டே - மாம்பழத்தே தின்னுப்போட்டு
மாட்டிக்கிட்டாப்லே மாட்டிக்கிட்டே (ஜிம்ஜிமுத்தா)

மாமியா வீட்டுக்குத் தண்ணியெடுன்னு
மாமியா வீட்டுக்குத் தண்ணியெடு
தாயார் வீட்டுக்குத் தண்ணியெடுன்னு
தலைவலின்னு படுத்துக்கோ
சாமியானை சத்தியமெல்லாம் சாகாதுன்னு படிச்சிக்கோ
தவிக்கவிட்டு என்னைத்தவிக்கவிட்டு தலைப்பாகையிலே
சவாரி வந்ததை நினைச்சுக்கோ (ஜிம்ஜிமு)
எத்தனைபேர்களைக் காட்டி வைச்சேன் உனக்
கெத்தனை பேர்களை கூட்டி வைச்சேன்
அத்தனைபேர்க்கும் குறையாமல் போட்டதை
அடியேனுக்கும் போட ஆரம்பிச்சே
கிடதகதாம் திமித்திமி தையத்தனந்தன
தீம்திமிதிமி திர்ரத்தினம் தீர்ரத்தனம் திரிகிடதோம்
எனவொரு தில்லானா ஆடடியோ குரங்கு (தில்)
வாழைப்பழமடி - குரங்கு
வாங்கி நான் வச்சிருக்க - நீ
காலைப்பிடிச்சாலும் - வாழைப்பழத்
தோலும் தரமாட்டேன்.

By: T. K. சுந்தர வாத்தியார்

மங்களம்.



Sri Swarnambika Press. Madura 10-7-46 Q. H No. 107- 20000. Customer Paper.

தந்தி:— புல்லியன். Tel:— BULLION.
டெலிபோன்:- 216. ஸ்ரீ ராமஜெயம். Phone:- 216.

## தங்க ஆபரணங்களுக்கும்,
## வெள்ளிப் பாத்திரங்களுக்கும்
## சிறந்த இடம்

# செல்வமாளிகை



**Pro:- S. S. அருணாசலம் செட்டியார் & பிரதர்,**
**137, 143, தெற்கு ஆவணிமூல வீதி,**
**மதுரை.**